Registered No. M. 2330 "SIDDHANTHAM"
Vol. 39—No. 6



# சித்தாந்தம்

சைவ சித்தாந்த மகா சமாஜத் திங்கள் வெளியீடு

'நன்க டன்னடி யேனையுந் தாங்குதல்
என்க டன்பணி செய்து கிடப்பதே'

மலர் 39 | பராபவ ஆனி 1966 ஜூன் | இதழ் 6

உள்ளுறை பக்கம்



பத்திராசிரியர்: மு. அருணாசலம், எம். ஏ.,
உதவிப் பத்திராசிரியர்: வித்துவான் அம்பை. இரா. சங்கரன்.

சைவ சித்தாந்த மகா சமாஜம்,
12, கிழக்கு மாடவீதி, மயிலாப்பூர், சென்னை-4.

ஆண்டுச் சந்தா ரூபா 3 தனிப்பிரதி 25 காசு

## சமாஜச் செயற்குழுக் கூட்ட அறிவிப்பு.

26-6-'66 ஞாயிறன்று காலை 9-30 மணிக்குச் சமாஜ அலுவலகத்தில் செயற்குழுக்கூட்டம் நிகழும். மாதக்கணக்கு சரிபார்த்தல், சிறப்புக் கூட்டங்கள் நடத்துதல் முதலிய பல பொருள்கள் பற்றிய முடிவுகள் தீர்மானிக்கப்பெறும். உறுப்பினர்கள் யாவரும் தவருது வருமாறு கேட்டுக்கொள்ளப் பெறுகிருர்கள். (செயலாளர்.)

## சமாஜச் செய்திகள்

நம் சமாஜ சார்பில் 13-5-'66 வெள்ளி மாலை 7 மணிக்குக் கபாலீச்சுரத்தில் கோபிசெட்டிப்பாளையம் செஞ்சொற் செல்வர் திரு. P. சொக்கலிங்கம் செட்டியார் அவர்கள் "திருநாவுக்கரசர்" பற்றிப்பேசினர். திரு. முருகேசன் அவர்களால் நன்றிநவிலப்பட்டது.

நம் சமாஜச் சார்பில் மஞ்சக்கொல்லை திருஞான சம்பந்த சபையார் சித்தாந்த சாத்திரக் கோடைவகுப்பை 25-5-66 முதல் 5-6-'66 முடிய நடத்தினர். உயர்திரு. சித்தாந்த சிகாமணி க. வச்சிரவேல் முதலியார் B.A.,L.T., அவர்கள் வகுப்பு நடத்திஞர்கள், சித்தாந்த ஆசிரியர், உயர்திரு. மு. அருணுசலம் M.A., அவர்கள் தொடக்கவுரை ஆற்றிஞர்கள். (விரிவு பின்னர்வரும்)

சைவப் பெரியார் திரு. ச. சச்சிதாநந்தம் பிள்ளை அவர்களின் சமயக் கட்டளைப்படி சமாஜத்தின்சார்பில், 10-6-66லே சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்த ஜன சபையில், பாம்பன்-ஸ்ரீமத்: குமரகுருதாச சுவாமிகள் திருநாள் கொண்டாடப்பெற்றது. "திருக்கோயில்" ஆசிரியர்-புலவர் ந. ரா. முருகவேள் எம். ஏ. எம்.ஓ. எல் அவர்கள் சுவாமிகள் சரித்திரம் பற்றி விரிவுரையாற்றினர்கள்.

நமது சமாஜத்தின் சார்பில் 25—5—66இல் திருமயிலைக் கபாலீச்சரத்தில் சேக்கிழார் திருநாளும், 5—6—66இல் திருஞானசம்பந்தர் திருநாளும் கொண்டாடப் பெற்றன. நாகர்கோயில்—சைவப்புலவர்—திரு. C. குமரேச பிள்ளையவர்கள் "சேக்கிழார்" என்னும் பொருள்பற்றியும், திருச்சி-தமிழ்ப் புலவர்—திரு. ஆர். பஞ்சநதம் பிள்ளை அவர்கள் "திருஞான சம்பந்தர்" என்னும் பொருள் பற்றியும் முறையே விரிவுரை யாற்றிஞர்கள்.

## பிற செய்திகள்

*புரசைத் திருநெறிக் கழகத்தார் மேமாதம் தஞ்சை ஜில்லாவில் தலயாத்திரை செய்தபோது, சித்தாந்தம் ஆசிரியர், திருப்பந்தணைநல்லூர், மந்தாரம் (ஆற்றூர்), விளத்தொட்டி, திருச்சிற்றம்பலம் ஆகிய தலங்களில் உடனிருந்து வழிபாடு செய்வித்து அனுப்பினர்கள். திருச்சிற்றம்பலத்தில் சிறப்பான முறையில் மகேசுர பூசை நிகழ்ந்தது.*

Reg. M. 2330 உ

சிவமயம்

# சித்தாந்தம்

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகைபொன் னம்பலவன
ஞானகுரு வாணியைஉள் நாடு.

மலர் 39 | பராபவ ஆனி 1966 ஜூன் | இதழ் 6

## சுடர்விட்டுளன் எங்கள் சோதி

(ஆசிரியர்)

கடவுள் உண்டு என்ற உணர்வோடு பக்திவசப்பட்டு நம் பெரியோர்கள் இரண்டாயிரம் ஆண்டுகளாகப் பல்லாயிரக் கணக்கான அருட்பாசுரங்களைப் பாடி இருக்கிறார்கள். எனினும், நாத்திக வாதமும் அவ்வப்போது தலையெடுத்து வந்திருக்கிறது. எல்லா ஆதிக்க சமயத்தாரும் இதை உலோகாயதம், சாருவாகம் என்ற பெயர்களால் கண்டித்து வந்திருக்கிறார்கள்.

நாத்திக வாதிகள் தங்களை அறிவியல் வாதிகள் என்றும் சொல்லிக் கொண்டார்கள். அறிவின் துணைகொண்டே எதையும் சாதிக்கலாம்; காரண காரியத் தொடர்பு உலகில் எதையும் விளக்கிவிடலாம் என்பன அவர்கள் கருத்து. இந்த நூற்றாண்டில் மிகவும் ஓங்கி வளர்ந்திருக்கிற விஞ்ஞான அறிவை அவர்கள் தங்களுக்குத் துணையாகக்கொள்கிறார்கள். மனிதன் தன் அறிவின் வலிமையால் இயற்கைச் சத்திகளை அளந்து, அவற்றைத் தனக்கு ஆட்படுத்தி, அவற்றின் மூலம் முன் எக்காலத்திலும் செய்திராத செயல்களை எல்லாம் செய்கிறான்; விண்வெளியில் செயற்கைக் கோள்களை அனுப்பி அவற்றைத் தன் விருப்பம்போல் செலுத்துகிறான்; மீண்டும் அழைத்துக்கொள்ளுகிறான். சந்திரமண்டலத்துக்குக் கோள்களை

அனுப்பிச் சந்திரனில் இறங்கச்செய்கிறான். தன் உடம்பி லுள்ள நுட்பமான கருவியாகிய இருதயத்தை, நுரை யீரலை,மூளையைத் திறந்து பரிசோதித்து மூடுகிறான். இவை எல்லாம் நினைத்துப்பார்க்க முடியாத அற்புத வல்லமை கள் என்பதை யாரும் மறுக்க முடியாது. இவற்றால் நாத்திக வெறி இன்னும் தலையெடுத்து ஓங்க இடமுண்டா கிறது என்பது உண்மை.

ஆனால் மறுபுறம், இவ்வறிவு வளர்ச்சிபெற்ற பெரிய விஞ்ஞானிகள் தங்கள் அறிவு வளர்ந்து விளக்கம் பெறப் பெறத் தங்களாலாவது ஒன்று மில்லை; தங்களைக் கடந்த ஒரு பேராற்றல் அனைத்தையும் இயக்குகிறது என்பதை நன்குணர்ந்து, அவற்றை எடுத்து உரைக்கவும் செய்கிறார் கள். சிறந்த அமெரிக்க விஞ்ஞானிகளில் ஒருவராகிய கிரெஸ்ஸி மாரிசன் என்பவர் தருக்கரீதியாகவும் விஞ்ஞான ரீதியாகவும் அனைத்தையும் படைத்து நடத்துகின்ற ஆண்டவன் ஒருவன் உளன் என்று நிறுவி இருக்கிறார். அவர் அமெரிக்க விஞ்ஞானக் கழகத்தின் தலைவராக இருந் தவர். அவருடைய கருத்துகள் சைவ மக்களுக்கும் ஆத்திக மக்களுக்கும் பின்னும் ஊக்க மளிப்பன வாகும்.

உலகம் இன்று இயங்கி வருவது கணித சாத்திர சட்டப்படி என்று அறிஞர்கள் கருதுகிறார்கள். இதில் சிறிது மாறுதல் ஏற்பட்டாலும் வாழ்க்கை சாத்தியமில் லாது போகும். பூமி இன்று ஆயிரம் மைல் வேகத்தில் சூரியனைச் சுற்றுகிறது. இந்த வேகம் மாறுபட்டால், உதாரணமாக நூறு மைலாகக் குறைந்துவிட்டால், பக லும் இரவும், பத்து மடங்கு நீண்டுவிடும். அதன் பய னாய்ப் பகலில் வெப்பத்தால் தாவர வுலகம் முழுமையும் எரிந்து சாம்பலாகும். இரவில் அனைத்துயிரும் உறைந்து மாண்டு போகும்.

உலக முழுமைக்கும் உயிர்தருவது சூரியன். சூரிய வெப்பம் சூரியன் மீது பாரன்ஹீட் 12,000 டிகிரி உடையது என்று சொல்லுகிறார்கள். அந்தச் சூரியன் நெடுந்தொலைவில் இருப்பதால் நமக்கு உயிர்வாழ்க்கைக்கு

வேண்டிய அளவு வெப்பமே பூமிக்குக் கிடைக்கிறது. சூரியன் சற்று நெருங்கி வந்தாலும் சரி, சற்று அதிக வெப்பம் பெற்றாலும் சரி, நாம் எரிந்து போவோம். அதே போலச் சூரியன் சற்று விலகிப் போனாலும் சரி, வெப்பம் சிறிது குறைந்தாலும் சரி, நாம் உறைந்து போவோம். இதுபோலவே, சந்திரன் சற்றே அருகில் இருக்குமானால், கடல் பொங்கி நிலமெல்லாம் மூழ்கிவிடும். மலைகளெல்லாம் கரைந்துவிடும். நம்மைச்சூழ்ந்துள்ள காற்று சற்றே குறைந்திருந்தால், ஆகாசத்திலிருந்து விழுகின்ற இலட்சக் கணக்கான விண்மீன் கட்டிகள், இன்று வாயுமண்டலத்தில் தாக்கி எரிந்துபோவது போலல்லாமல், பூமியைத் தாக்கி அதை நாசமாக்கிவிடும்.

இவை இத்தனையும், இயக்குகின்ற அறிவுடைப் பொருள் ஒன்று உண்டு என்பதையே காட்டுகின்றன.

இரண்டாவதாக உயிர் வாழ்க்கை. இது எப்படி நடக்கிறது? "விதை ஒன்று போட்டால் சுரை ஒன்று முளைப்பதில்லை." வாமன மூர்த்தியாகத் திருமால் அவதாரம் செய்தபோது, "ஆலமர் வித்தின் அருங்குறள் ஆனான்" என்று கம்பர் கூறினார். ஆலின் விதை எவ்வளவு சிறியது? நாற்பெரும் படையொடு மன்னர்க்கிருக்க நிழலாக இருக்கின்ற ஆலமரம் எவ்வளவு பெரியது! மரம், விழுது, கிளை, இலை, அதன் பசுமை, கொழுந்தின் மென்மை, பழத்தின் செம்மை, இவை யாவும் எவ்வாறு அச்சிறு விதையுள் அமைந்து அடங்கி இருக்கின்றன? இவற்றை அங்கு அடக்கி வைத்தவர் யார்?

இனி மூன்றாவதாக, வாயிலாப் பிராணிகளுக்கு அமைந்துள்ள இயற்கையறிவை கூர்ந்து நோக்கும்போது அந்த அறிவைக் கொடுத்த ஆண்டவன் ஒருவன் உளன் என்ற நினைவு வரும். போலீஸ் நாய்களுடைய மோப்பசக்தியைப் பற்றி நாள்தோறும் பத்திரிகைகளில் படிக்கிறோம். நாய்களிடத்தில் இந்தச் சக்தி எங்கிருந்து வந்தது? ஒருதுளி சர்க்கரை சிந்திவிட்டால், அடுத்த விநாடியே அங்குப் பல்லாயிர எறும்புகள் எவ்வாறு வருகின்றன? "மரம்

பழுத்தால் வௌவாலை வாவென்று கூவி இரந்தழைப்பார்'' யாருமுண்டா? எந்த இருளில் பறந்தாலும், வௌவால் ஒரு பொருளில் மோதுவதில்லை. அதனிடம் ''ராடார்'' போன்ற சக்தி இருப்பதாக விஞ்ஞானிகள் கருதுகிறுர்கள். இந்தச் சக்தி யேது? சர்வ வல்லமையுள்ளவன் என்று தன்னைக் கருதிக்கொள்ளும் மனிதனிடத்தில் இவை எவையேனும்உண்டா? தானே படைத்துக்கொள்ள இயலுமா!

வாழ்க்கை வாழ்வதற்கும், இனவிருத்தி செய்வதற்கும் உரிய தேவைகள் யாவும் பிராணிகளிடத்தில் படைக்கப்பட்டு இருக்கின்றன. குளவிமார் கூடுகட்டி முட்டையிட்டு அதிலிருந்து வெளிவரும் குஞ்சுக்குத் தீனியாக ஒரு புழுவைக் கொண்டுவந்து வைத்து மூடுகிறது. உயிரோடு கொண்டுவந்து வைத்தால், புழு முட்டையைத் தின்று விடும். புழுவைத் தன் கொடுக்கால் குளவி கொட்டுகிறது. அதனுல் புழு இறந்துவிட்டால் அழுகி, முட்டையையும் அழுகச்செய்யும். ஆகவே, குளவியானது அளவாகக் கொட்டிப் புழுவை மயக்கமடையச் செய்கிறது. மயங்கிக் கிடக்கிற புழுவை வெளிவருகின்ற குளவிக்குஞ்சு கொஞ்சங் கொஞ்சமாகத் தின்று வளர்ந்து கூட்டை உடைத்துக் கொண்டு வெளியே வந்து பறந்துபோகிறது. கூட்டை மூடிவிட்டுப் பறந்து சென்ற தாய்க்குளவி தன் குஞ்சு என்னவாயிற்றென்று தேடுவதில்லை. ஆனுல் அது செய்த வேலைகள் யாவும் திருத்தம். இது எப்படிச் சாத்தியம்?

மனிதனிடம் பகுத்தறிவு வளர்ச்சி பெற்றிருக்கிறது. பிராணிகளிடம் இது இல்லை. இதை விளக்கத் தேவை இல்லை. பகுத்தறிவினுல்தான் நாம் இவை யனைத்தையுமறிந்து, இவற்றிற் கப்பால் பேரறிவான பொருள் ஒன்று உண்டு, அதன் அம்சமான சிற்றறிவு நம்மிடம் விளக்கம் பெற்று இத்தனையும் உணரச் செய்கிறது என்பதை அறிகிறோம்.

எல்லா உயிர்களினுடைய குணுதிசயங்கள் அனைத்துக்கும் மூலாதாரமாய் ஒரு பொருள் உள்ளது என்று கண்டு, அதற்கு உயிர்நூல் வல்லார் 'ஜீவன்'' என்று

பெயர் வைத்திருக்கின்றார். உலகத்தில் இன்றுள்ள 300 கோடி மக்கள் உயிரின் பண்புகளுக்கு ஆதாரமாக அல்லது வித்தாக உள்ளவை 300 கோடி ஜீவன்கள். உயிர்வாழ்வன அனைத்துக்கும்—தாவரம், நீர் வாழ்வன, பறப்பன, ஊர்வன, விலங்கு, மனிதன் ஆகிய அனைத்துக்கும்—ஆதாரமாயுள்ள ஜீவன்கள் பல்லாயிரங் கோடியாகும். இவை யாவற்றையும் ஒருங்குசேர்த்து வைத்தால், ஒருசிறு கரண்டியில் குவித்துவிடலாம். அப்படியானல், இவற்றுள் ஒவ்வொன்றும் எவ்வளவு சிறியனவாய் இருக்கும்? இவற்றை நோக்க அணுக்களெல்லாம் அண்டங்கள். இது உயிர்நூல் கூறும் உண்மை. ஆனல் இந்த ஜீவன் ஒவ்வொன்றிலும் அந்தந்தத் தனி உயிரினுடைய அல்லது மனிதனுடைய உடற்பண்புகள், உள்ளத்தின் இயல்பு, பாரம்பரியத் தத்துவம் ஆகிய குணவிசேஷங்கள் அனைத்தும், பொருத்தி வைக்கப்பட்டுள்ளன. இது யாவற்றிற்கும் அதீதமாயுள்ள வேறொரு ஞானமயமான பொருளின் ஆற்றலால் மட்டுமே சாத்தியம்.

இயற்கையில் உயிர்களிடையே ஒரு கட்டுப்பாடு மேலிருந்து அமைக்கப்பட்டுள்ளது. எந்த ஒரு இனமும் அதிகமாகப் பரவி உலகை ஆட்கொள்வதில்லை. உதாரணமாக, அறுபது ஆண்டுகளுக்கு முன்னே வேலிக்காக எங்கும் சப்பாத்திக்கள்ளி வைத்தார்கள். சில ஆண்டுகளிலே இக்கள்ளி கட்டுமீறிப்படர்ந்து தோட்டம் யாவுமே அழித்துவிடும்போல் இருந்தது. அந்த நிலையில் கொச்சீனீல் என்ற பஞ்சு போன்ற ஒரு பூச்சி ஆஸ்திரேலியாவில் தோன்றிற்று. இதைக் கொண்டுவந்துவிட்ட மாத்திரத்தில் கள்ளியானது அழிந்து அளவுக்கு உள்ளடங்கி நின்றது. கள்ளியை அடக்கிய பூச்சியும் தன் வியாபகத்தைச் சுருக்கிக்கொண்டது. இந்த விநோதத்தை என்ன என்று சொல்ல முடியும்?

டார்வின் என்ற மேல்நாட்டு விஞ்ஞானி "உள்ளது சிறத்தல்" என்ற கொள்கையை ஒரு சித்தாந்தமாக நிலைநாட்டினர். அது பூரணமான உண்மையாகும் பட்சத்தில், உலகம் இன்று இருக்கமுடியாது. வெட்டுக்கிளிகள் படை

யெடுப்பால் இலட்சக்கணக்கான ஏக்கர் பயிர்கள் நாச மென்றுபத்திரிகைகளில்படிக்கிறோம். அந்தநாசம்பெருகுவ தில்லை. பூச்சிகள் எவ்விதமோ நாசமாகின்றன. பயிர்கள் பின்னும் செழிக்கின்றன. டார்வின் கொள்கைப்படி இப் பூச்சிகள் வடிவத்தில் பெரியனவாக வளர வேண்டும். மாடளவுள்ள வெட்டுக்கிளி நினைத்துப்பார்க்க முடியுமா? மாடளவுள்ள குளவியை நினைத்துப்பார்க்க முடியுமா? இவை இருந்தால் பிராணி வருக்கமே நாசமல்லவா? இவற்றை அளவுக்கு, உட்படுத்தி வைக்கின்ற சக்தி ஒன்று இருக்கத்தான் செய்கிறது.

கடைசியாக, மனிதன் தன் ஆற்றலை மறந்து தனக் கப்பாற்பட்ட பொருள் ஒன்று உண்டென்று கற்பனை செய்ய முற்படும் நிலையே, கடவுள் உண்மைக்குச் சிறந்த சான்றாகும். மனத்தால் எண்ணிப் பார்ப்பது என்பது மனிதன் ஒருவனுக்கே சாத்தியம். அவன் ஒருவனாலேயே புலனறிவுக்கு அப்பாற்பட்டவற்றை மனத்தால் உணர முடிகிறது. உயிர், அதற்குரிய கட்டுக்கள், கட்டுக்களி னின்று விடுதலை, இவற்றைக் கடந்த கடவுள், அக்கட வுளின் அட்டமூர்த்தமான வடிவம்—அதாவது அவன் நீக்கமற யாவினும் நிறைந்து நிற்கும் நிலை—ஆகிய அனைத் தையும் அவனே தன் கற்பனையால்—அதாவது தூலப் பொருளைக் கண்டுணரவல்ல மனத்தால், காண்கிறான். இக்காட்சி மனிதனுக்கு மனோபாவனையாலும், விஞ்ஞான ரீதியாலும் உண்மையே. இதுவே பார்க்குமிடமெங்கு மொரு நீக்கமற நிறைந்து அனைத்தினையும், மனிதனையும், தன்னையும் காட்டவல்லதொரு பரிபூரணானந்தப் பொரு ளொன்று உண்டென்பதற்குச் சிறந்த சான்று.



# சேலூர்

(மு. அருணாசலம்)

திருஞான சம்பந்தர் தம் தல யாத்திரைகளில் பல தலங்களைத் தரிசித்துப் பதிகம் பாடி வழிபட்டார் என்று சேக்கிழார் பாடியிருக்கிறார். பல பதிகங்கள் சம்பந்தர் திருமுறைகளில் சேர்ந்துள்ளன. சில பதிகங்கள் கிடைக்க வில்லை என்று அறிகிறோம். பதிகங்கள் கிடைக்காத தலங் களில் சேலூர் என்பதும் ஒன்று. புள்ளமங்கைப் பதிகுலம் ஆலந்துறைக் கோயிலை அடைந்து,

மன்னும் அக்கோயில் சேர்மான் மறிக்கையர்தம்
பொன்ன டித்தலம்உறப் புரிவொடுந் தொழுதெழுந்து
இன்னிசைத் தமிழ் புனைந்துறைவர் சேலூருடன்
பன்னு பாலைத் துறைப்பதி பணிந்தேகினர்

என்பது பெரிய புராணம் 2267. இங்குச் சொல்லப்பட்ட சேலூர் என்பது புள்ளமங்கையிலிருந்து நான்கு மைல் தென்கிழக்காக உள்ளது. பாலைத்துறை சேலூருக்கு நான்கு மைல் கிழக்கே உள்ளது. புள்ளமங்கைக்கும் பாலைத்துறைக்கும் தேவாரப் பதிகங்கள் உள்ளன. ஆனால் சேலூருக்குப் பாடல் இன்று கிடைக்கவில்லை.

**இடம்:** இவ்வூர் கும்பகோணம் தஞ்சை பஸ் மார்க்கத்தில் கும்பகோணத்தி லிருந்து பத்தரை மைல் மேற்கே சாலை ஓரமாகப் பண்டாரவாடை என்ற ஊருக்குத் தென்புறம் உள்ளது. சுமாரான குடியிருப்பு உடைய ஊர். சாலையி லிருந்து இரண்டு பர்லாங் தூரத்தில் கோயில் உள்ளது. ஊருக்குத் தென்புறம் கோயில்.

**பெயர்:** சேலூர் என்பது சேல்—ஊர் சேல்—மீன். திருமால் மச்சாவதாரம் எடுத்தபோது இங்குச் சிவபெருமானைப் பூசித் தார் என்பது வரலாறு. ஆகவே ஊர் மச்சபுரி; சுவாமி மச்சபுரீசுவரர்; அம்பிகை சுகந்த குந்தளாம்பிகை; தலவிருட் சம் வன்னி.

கோயில்: விசாலமான கோயில். நல்ல மதில் சுவரும் சுவரை அடுத்து வெளியில் ஒரு பிரகாரமும் இருந்தன. இவற்றைச் சூழ்ந்து தென்னந் தோப்புகள். மதில் இப்போது சிலமாய் இருக்கிறது. முன்பு மூன்று நிலைக் கோபுரம் இருந்தது. நன்முறையில் பராமரிப்பு இல்லாமையால் கோபுரத்தில் மரங்கள் முளைத்துக் கோபுரம் ஐம்பது வருடங்களுக்கு முன் இடிந்துவிட்டது. இப்போது அதன் கற்பீடங்கள் மட்டும் ஆறடி உயரத்துக்கு உள்ளன. கோபுரம் இடிந்த கற்கள், உள்புறம் பெரிய குவியலாகக் கிடக்கின்றன. மடைப்பள்ளி முதலியன இடிந்துபோயின. கோயில் வாயிலை ஒட்டி, வெளியே குருக்கள் வீடு அமைந்துள்ளது. கிழக்கு நோக்கிய சந்நிதி.

வலப்புறம் அம்பிகை கோயில். தெற்கு நோக்கிச் சுவாமி கோயிலினுள் சென்றால் முதலில் பெரிய மகாமண்டபம். மண்டபம் கருவறைகள் யாவும் பழமையான கருங்கற்களால் ஆனவை. வெளி வாயிலுக்கும் உள் வாயிலுக்கும் இடையில் நீண்டதூரம். பிரகாரம் எவ்வளவு பெரிதென்பதை இது காட்டுகிறது. துவஜ ஸ்தம்பம் இருந்த பீடமுண்டு. இங்கு நந்தி கோயிலிலுள்ள நந்தி சற்றே பெரிய வடிவம்.

உள்வாயில் வலப்புறக் கோட்டத்தில் விநாயகர்; சிவப்புக்கல்; இப்படி இருப்பது அபூர்வம்; புடைப்புச் சிற்பமாக அருகே பசுபதீசுவரர்; வாயிலையடுத்த மண்டபத்தில் வடபுறம் நவக்கிரகங்கள்.

மூர்த்தி: வாயிலுக்கு வெளியே பின்னமான சில பழைய சிலை வடிவங்கள் வைக்கப்பட்டுள்ளன. நந்தி; பைரவர்; அடுத்து ஒரே கல்லில் ஒரு நாயனரும் அவர் மனைவியாரும்; பெரிய அம்பிகை வடிவம்; தனி முருகன் மயிலுடன்; அடுத்து மற்றொரு பைரவர்.

உள் நுழையும் வாயிலின் வடபால் ஒரு கல்லில் மீன் சிவலிங்கத்தைப் பூசிக்கும் சிறு சிற்பமொன்றுள்ளது.

அது திருமால் பூசையைக் காட்டும். துவார விநாயகர் தரும நாயகர் என்ற பெயருடையவர். பெரிய வடிவம். வடபக்கம் பாலசுப்பிரமணியர் துவாரபாலகர் கல் வடிவம்; நடுத்தர மானது. இரு கைகளே உடையது.

சுவாமி நடுத்தர வடிவினர். அம்பிகை பெரிய வடிவம்; பின்னமான பழைய பெரிய அம்பிகை வடிவம், வாயிலுக்கு வெளியே வைக்கப்பட்டுள்ளது.

கோட்டங்களில் விநாயகர் ; தக்ஷிணாமூர்த்தி மண்டபத்தில் பழைய தக்ஷிணாமூர்த்தி பின்னமாகிக் கோட்டத்தில் உள்ளபடியே வைக்கப்பட்டுள்ளார். புதியவர் அவருக்கு முன்புறத்தில்; நிருதி விநாயகர் நர்த்தன விநாயகராக உள்ளார். ஒருவேளை இவர் தென் கோட்டத்தில் இருந்து, அங்குள்ள விநாயகர் இங்கு இருந்தார்போலும். பின் கோட்டத்தில் திருமால்; இவர் வஸ்திரம் அணிந்திருப்பது புது மாதிரியாகப் புத்த வடிவங்களில் உள்ளதுபோன்றது. எதிரில் பாலசுப்பிரமணியர் கோயில்; பழைய கல்வெட்டுடைய கல் இங்குப் படிபோல அமைக்கப்பட்டுக் கிடக்கிறது.

தென் திருமாளிகைச் சுற்றில் ஒருபகுதி மட்டும் மண்டபமாக உள்ளது. அங்கசுரதேவர் என்று சொல்லுகின்ற ஒரு மூர்த்தி சண்டிகேசர் போல இடக்காலை மடித்து அமர்ந்த கோலம். வலக் கையில் சூலம். இடக்கையில் பாசம். இதை அடுத்துச் சுத்த கன்னியர். 63 நாயன்மாரில் மூவர் என்று மூன்று சிலைகள் உள்ளன. அப்பர், சுந்தரர், சம்பந்தர் மூவரும் பெரிய வடிவங்கள். ஆனால் ஆகிருதி தகுந்த உயரமில்லாமல் குட்டை. பின் பெரிய விசுவநாதர் விசாலாக்ஷி; வடபுறக் கோட்டங்களில் பிரமன்; பாலதுர்க்கை; மகிடன் இல்லை.

அம்பிகை கோயில் முன்புறம் பெரிய வௌவால் மண்டபம். அதன் இரு புறங்களிலும் உட்புற வாயிலை

அடுத்து அகோர வீரபத்திரரும் காத்தனும் எதிரெதிராக உள்ளனர்.

எல்லா உற்சவ மூர்த்திகளும் உள்ளனர்; பழமையாகத் தெரிகின்றனர். உற்சவ முருகன் மட்டும் வள்ளி தேவயானையுடன்; சந்திர சேகரர் இருவர்; பெரிய வடிவம்; ஐம்பதாண்டுகளுக்கு முன் மண்ணிலிருந்து கிடைத்தார். சண்டேசர்; மழுவில்லை. சம்பந்தர் வடிவம். திருமுறைக் கோயில் அமைக்கப் பெற்றுள்ளது.

விழா: கோயில் வாகனங்கள் உள்ளன. முன்னம் பிரமோற்சவம் நடந்தது. இப்போது இல்லை. மாத விழாக்கள் மட்டும்.

வரலாறு: திருமால் பத்து அவதாரங்களிலும் சிவபிரானைப் பூசித்ததாக வரலாறுகள் உள்ளன. இங்கு மச்சாவதாரக் காலத்தில் மச்சமாக இருந்து பூசித்தார்.

நிருவாகம்: தருமகருத்தா உண்டு. விசாலமான பரப்புடைய இக் கோயிலுக்கு ஐந்து ஏக்கர் நிலமே உண்டு. ஆகவே நன்முறையில் கோயில் பாதுகாக்கப் பெறவில்லை. இவ்வூரில் முஸ்லீம் ஆதிக்கம் மிகுதி. இவர்களுடைய குடியேற்றமும் ஆதிக்கமும் பெருகப் பெருக சிவாலயமும் அதன் சொத்துகளும் நலிவடைகின்றன. ஊருக்குள் நுழையும் சாலை முன்புறம், புதிய முஸ்லிம் குடியேற்றம் அமைக்கப்பட்டு வருகிறது. இன்று பெயரளவிலேனும் கோயில் என்றிருப்பதே கடவுள் திருவுள்ளம்.

கல்வெட்டு: கருவறையைச் சூழ்ந்து மூன்று பக்கச் சுவர்கள் முழுமையும் அடிவரிகளும் கொடுங்கையும் உட்பட மிகுதியான கல்வெட்டுகள், இராஜராஜன் முதலான மன்னர் பலருடைய கல்வெட்டுகள் காணப்படுகின்றன.

---

# திருமூலரும் அசபா நிலையும்

(சைவப் புலவர் சி. குமரேசப் பிள்ளை)

திருமூல தேவநாயனார் திருமந்திரம் அருளுதற்குச் சமைந்த பெருநிலையைச் சேக்கிழார் பெருமான் அதி அற்புதமாகப் படம் பிடித்துக் காட்டுகிறார். கைலையிலிருந்து பொதியம் நோக்கி வந்துகொண்டிருந்த சிவயோகியார் ஆவடுதுறையை வணங்கிக் கடந்து செல்லுகையில், ஆக்கள் சில தம்மை மேய்ப்பனாகிய மூலன் இறந்ததால் படும் துன்பங் கண்டு இரங்கி, தன்னுடல்விட்டு மூலன் உடல் புகுந்து திருமூலராய் எழுந்து ஆக்களின் துன்பம் துடைத்து ஒரு பொதுமடம் சென்று யோகிருந்தார். அது கண்டு வருந்திய மூலன் மனைவி ஊராரிடம் முறையிட, அவர்கள் மூலரிருந்த இடத்தை அடைந்தனர். யோகிருந்த மூலரைப் பார்த்த சிலர் 'மூலன் பித்து கொண்டான்' என்றனர். வேறுசிலர் 'பேயின் சார்பினால் வந்தது' என்றனர். ஆனால் மெய்யுணர்வுடையார் சிலர் உற்றுநோக்கி,

"பித்துற்ற மயலன்று பிறிதொருசார் புளதன்று
சித்தவிகற்பங் களைந்து தெளிந்துசிவ யோகத்தில்
வைத்த கருத்தினராய் வரம்பில்பெரு மையிலிருந்தார்
இத்தன்மை அளப்பரிதால் யாவர்க்கும் என்றருள்
செய்தார்"

என்று இயம்பியதாகச் சேக்கிழார் பெருமான் கூறுகின்றார்.

திருமூலர் யோகிருந்த பெருநிலை 'சித்தவிகற்பங் களைந்த தெளிந்த சிவயோகம்' என்று பேசப்படுகிறது. சித்தவிகற்பங் களைதலாவது, வஞ்சப்புலன்கள் ஐந்தின் வழியால் வரும் மயக்கத்தினை நீக்குதல். உடலும் உலகும் மாயையின் விரிவு; ஆன்ம பரிபக்குவத்திற்காக ஆண்டவனால் அருளப் பெற்றவை என்பதை உணராது அவையே மெய்யென மாறுபட்டுணர்தல். இது பாச ஞானம் எனப்படும். இதனையே வள்ளுவப் பெருந்தகையார், 'பொருளல்லவற்றைப் பொருளென்றுணரும் மருள்' என்றார் இம்மருள் ஆண்டவனருளால் நீங்கப்பெறுதல் வேண்டும்.

அவ்வாறு நீங்கப் பெறுதலே சித்தவிகற்பங் களைதல். அந்நிலையைத் தனக்கருளிய இறைவனை மணிவாசகப் பெருமானர் "மாறிநின்று எனை மயக்கிடும் வஞ்சப் புலனைந்தின் வழியடைத்த அமுதே" என்றார். சிவனருளால் சித்த விகற்பங் களையவே 'நான் எனப்படுவது ஆன்மா அல்லது பசுவாகிய சித்துப் பொருள் என்றும், உலகம் மாயாமலத்தின் காரியமாகிய சடப்பொருள் (அறிவற்ற பொருள்)' என்றும் உணர்தலாகிய பசுஞானம் கைகூடும். இவ்வான்மா ஒன்றைச் சார்ந்திருக்கும் இயல்புடையது. ஆகவே பசுஞானம் கைகூடி உலகப்பற்றுச் சிறிது நீங்கிய அளவிலே, 'தனக்கு ஒரு தலைவன் உண்டென்றும், அத்தலைவனே தன்னை உலகோடு பொருந்தி வாழச் செய்கிறான்' என்றும் பதியருளால் உணரப்பெற்று அப்பதியைச் சார்ந்து நிற்கத் தலைப்படுகிறது. இது பதிஞானம் எனவும், சிவஞானம எனவும் படும். இந்த ஞானமே முத்திக்கு ஏது. பாசம் நீங்குதலும் அதனல் சிவஞானம் ஏற்படுதலும் தொடர்பாக நிகழும். அவ்வாறு மலத் தொடர்பு படிப்படியாக நீங்கிச் சிவத்தோடு தொடர்பு கொள்ளுதலே சிவயோகம் எனப்படும. அதாவது ஆன்மா சிவத்தோடு சேர்ந்து சிவனருளால் நிற்றல். இதனையே மெய்கண்டார் ஏகனுகி இறைபணி நிற்றல் என்பர். இதுவே திருமூலர் சித்த விகற்பங் களைந்து தெளிந்த சிவயோகத்தில் நின்ற நிலை. சிவயோகத்தில் தெளிந்த சிவயோகமாவது மலப்பற்றறுக் கழிந்த சிவயோகம். அதாவது ஆன்ம அறிவு, இச்சை செயல்கள் இறைவன் அறிவு, இச்சை செயல்களுள் அடங்கித் தன், வயம் கெட்டுச் சிவமயமாய்க் காணுகின்ற நிலை—ஆன்மா சிவமாய் ஒன்றுபட்டு நிற்கும் நிலை. இந்நிலை 'நின்மலதுரிய நிலை' எனப்படும். இதனையே "எப்பொருளும் அசைவில்லை என அந்தப் பொருளோடு இசைவதுவே சிவயோகம்" என உண்மை நெறிவிளக்கம் கூறும். "சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட அத்தன்" என்றார் மணிவாசகர். அவ்வாறு ஆட்கொள்ளப்பட்ட தெளிந்த சிவயோகி நிலையில் மூவாயிரம் ஆண்டுகள் நின்று தான் பெற்ற சிவ

போகமாம் பேரின்ப நிலையை வையகம் பெற,

'நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைபொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படும் தானே"

என்று வழிவகுத்து மூவாயிரம் மந்திரங்களைத் தந்தார்.

வான்பற்றி நின்ற மறைப்பொருளாவது - சிதாகாச சொரூபமாகிப் பரமசிவத்தைப்பற்றி நிற்கின்ற வேதங்களின் பொருள். அதுவே மந்திரம். 'ஊன் பற்றி நின்ற உணர்வுறு மந்திரமாவது - உடலைப்பற்றி இருப்பதாகிய உயிரினிடத்து நிலைபெற்ற - ஞானத்தில் நிலைபெற்ற மந்திரம். வேதப் பொருளாகிய ஐந்தெழுத்தே உயிர்க்கண் நிலைபெற்ற ஞானத்தில் பொருந்திய மந்திரம். இவ் வைந்தெழுத்தே, வேதாகமங்களைக் கற்றுணர்தலாகிய அபரஞானத்தை, அநுபவமாகிய பரஞான நிலைக்குக் கொண்டுவருகின்றது. அஞ்ஞானம் நீங்குதற்கும், மெய்ஞ்ஞானம் பிரகாசித்தற்கும், பிரகாசித்த ஞானம் நிலைத்தற்கும் பஞ்சாக்கரம் முறைப்படி சேதப்பெறுதல் வேண்டும். ஏனெனில் அப்பஞ்சாக்கரம் எம்மால் சுட்டியுணரப்படாத இறைவனின் தூலத் திருமேனி எனப்படும். ஆகவே அதனைப் பற்றப் பற்ற-பொருந்தப் பொருந்த-சிவயோகம் தலைப்படும். பொருந்து முறை யாவது யாது?

பஞ்சாக்கரம் தூல பஞ்சாக்கரம், சூக்கும பஞ்சாக்கரம், அதிசூக்கும பஞ்சாக்கரம் என மூவகைப் படும். தூல பஞ்சாக்கரம் 'நமசிவாய' என்பது. எல்லா ஞான நூல்களும் கூறும் முப்பொருள் உண்மையை இப்பஞ்சாக்கரம் தன்னுள் கொண்டிருக்கிறது. நம என்பது பாசத்தையும் சிவ என்பது பதியையும், ய என்பது உயிரையும் குறிக்கும். இத் தூல பஞ்சாக்கரத்தைத் தீக்கை பெறுதாரும் ஓதலாம். இதனல், தாம் பாசஞானம் ஒன்றே உடையராய் இருப்பதை உணர்வர்; பாசவீடு பெறுவதற்கான எண்ணம் உதிக்

கப் பெறுவர்; தீக்கை பெற அவாவுவர். அதாவது சிவ னுடைய திருவருளைப் பெறுதற்கு அவாவுவர். இதனை 'அஞ்சில் இறைவன் அருள் பெறலாமே' என்ற வரி வலி யுறுத்தும்.

"நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யானமகிழ்ந் தேத்தவல் லாரெல்லாம்
பந்த பாசம் அறுக்கவல் லார்களே"

என்றார் ஞானசம்பந்தர்.

சூக்கும பஞ்சாக்கரம் 'சிவயநம' என்பதாம். தூல பஞ்சாக்கரம் ஓதப்பெற்று வந்ததால் பாச நீக்கம் பெற்றுத் தீக்கைபெற அவாவுற்றவழி, ஞான குருவினை அதிட்டித்து நிற்கும் சிவத்தினால் சுத்தி செய்யப்பெறும். அதாவது தீக்கை செய்யப்பெறும். அவ்வாறு தீக்கை செய்யுங்கால் குருவால் உபதேசிக்கப் பெறுவதே சிவயநமவெனும் சூக்கும பஞ்சாக்கரம். இதனை ஓதி வருவதால் ஆன்மா மலதாரகத்தை நீத்துத் திருவருளைத் தாரகமாகக் கொள்ள வேண்டிய உண்மை அறியவரும்—குருவருளால் சிவத்தை யடைய விரும்பும். இதனையே 'சிவயநம' எனும் சூக்கும பஞ்சாக்கரம் காட்டும். இந்த முறையில் 'ய' காரமாகிய உயிருக்குப் பிற்பட்டு 'நய' கிடத்தல் பாசம் நீக்கப்பட வேண்டுதலைக் குறிக்கும். 'ய' காரம் 'வ' காரத்தை அண்டிக்கிடப்பது குருவருளாம் திருவருள் வழி ஒழுக, உயிர் தலைப்பட்டிருத்தலைக் காட்டும். இப் பொரு ளுணர்வோடு ஓதுவதனால் ஆன்ம நிலையினை நன்கு உணரப் பெறுவோம். இதனால் சிவயோகத்திற்கான நல்ல தவம் சித்திக்கும்.

அதிசூக்கும பஞ்சாக்கரம் 'சிவய சிவ' என்பது. இத னைக் காரண பஞ்சாக்கரம் எனவும் முத்தி பஞ்சாக்கரம் எனவும் கூறுப. ஸ்ரீபஞ்சாக்கரம் எனச் சிறப்பித்துக் கூறுவது முண்டு. உயிர் பாசத்தை நீக்கிப் பதியை நாடுதல்

என்பதே இந்த ஐந்தெழுத்தின் அரும்பொருள். 'ய்' என்னும் உயிர் பாசத்தை நீக்கி 'வ' என்னும் அருளோடும், 'சி' என்னும் சிவத்தொடும் கூடிநிற்றல் என்பது இப் பஞ் சாக்கரத்தின் பொருள். இப்பஞ்சாக்கரங்களை உச்சரிக்கும் முறையும் மூன்றாகும். அவை மானதம், மந்தம், உரை என்பன. மானதம் என்பது மனத்தால் பாவிக்கும் அதி சூக்கும நிலை. மந்தம் என்பது சூக்கும வைகரி வாக்கால் தன் செவிக்கு மட்டும் கேட்கும்படி உச்சரித்தல். உரை என்பது தூல வைகரிவாக்கால் தனக்கும் பிறருக்கும் கேட்கும்படி உச்சரித்தல். மானதத்தால் உச்சரிக்கப்படு வதே தியானம் எனப்படும் சிறப்பினை யுடையது. அரன் திருமேனி ஐந்தெழுத்தால் அமைந்திருத்தலையும், ஆன்மா வும் அரனும் அடியானும் உடையானுமாக அமைந்திருத் தலையும், தியானிக்கத் தியானிக்க, பொடியிட்டு விளக்க விளக்கக் கண்ணாடி, மாசு நீங்கி ஒளி மேலிடுவது போல, சிவம் உள்ளத்தே மேலிட்டு விளங்கும். அவ்வாறு விளங்க 'ய' கரமாகிய சீவ போதம் முற்றும் கெட 'சிவ சிவ' என் னும் நாலெழுத்து மந்திரம் உச்சரிக்கப்படும். அதனை மேலும் நெஞ்சழுத்திக் கணிக்கும் தோறும் மானதமாகக் கணித்தலும் நின்று போகும்; அந்நிலையில் உச்சரிக்கப் பெறும் 'சிவ' எனும் மறைமொழியைப் பேசும் எழுத் துடனே பேசா எழுத்து என்பர். இதில் பேசா எழுத்து'சி'. அது பெருவெழுத்து எனவும் படும். 'வ'—பேசும் எழுத்து. அது பிஞ்செழுத்து எனவும் படும். 'வ' கரமாகிய திரு வருளாலேயே 'சி' கரமாகிய சிவம் உணரப்படுதலின் 'வ' கரத்தைப் பிஞ்செழுத்து என்றார். பேசாமந்திரமாகிய 'சி' அசபா மந்திரம் எனப்படும். அஜபா—செபிக்கப்படா தது—இது ஜபிக்கப்படாமலே பிராணனுடன் சேர்ந்து இயங் குவது. பிரணவத்திற்கும் பஞ்சாக்கரங்களுக்கும் நிலைக் களம் இதுவே. இம்மந்திரத்தைச் சிந்தித்து ஆனந்தமய மாகிவிடுதலே அஜபை என்னும் நிலை. அந்நிலைமையைத் தனக்கருளுமாறு 'நான்மறைமுபாம்பின் காவில் உணர்த்திக் குண்டலி யதனில் கூடியஅசபை விண்டெழு மந்திரம்வெளிப்

பட உரைத்து' என விநாயகப் பெருமானை வேண்டுகிறார் ஔவையார். அந்த அஜபா சித்தி திருமூலர் எய்தி நின்ற தெளிந்த சிவயோக நிலை. இந்தச் சித்தி கைவந்தவர்களே ஆசாரியர் ஆவர். திருமூலர் அப்பெரு ஆசாரிய நிலையிலே நின்று தாம் பெற்ற சிவபோகப் பேரின்பத்தை வையகம் பெற,

"போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன சேவடி
சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தை
ஏற்றுகின் றேன்நம் பிரானஓர் எழுத்தே"

என்று அருளிச் செய்கின்றார்.

· நாயகன் சேவடியைச் சிந்தையாலுணர்ந்து போற்றுகின்றேன்; நம்பிரான் ஓரெழுத்து மந்திரமாகிய 'சி' என்னும் அசபா மந்திரத்தால் பல காலம் கணிக்கின்றேன்; அதனால், சிவபெருமான் திருவடியை உள்ளத்துணர்வால் தெளிகின்றேன் எனத் தான்பெற்ற இன்ப நிலையைக் கூறி அதனை வையகமும் பெற–பற்றிப் பொருந்த–வழி வகுத்துக் காட்டியருளினார்.

அந்நிலையே யாவரும் அடையத்தக்க இடம். தேவர்க்கும் மூவர்க்கும் மற்றும் யாவர்க்கும் பெருமானாகிய முழுமுதற் சிவன் உறைகின்ற இடமாகும். அந்தத் திருவிடமே சிற்றம்பலம்; சிதம்பரம்; திருஅம்பலம்; அழகிய பொது அம்பலம் என்ற உண்மையை அநுபவித்து,

"தேவர் உறைகின்ற சிற்றம்பலம் என்றும்
தேவர் உறைகின்ற சிதம்பரம் என்றும்
தேவர் உறைகின்ற திருஅம்பலம் என்றும்
தேவர் உறைகின்ற தென்பொது வாமே"

என்று கூறுகின்றார்.

அந்த அம்பலத்திலே ஆண்டவன் திருக்கூத்து நிகழ்கிறது. அற்புதத் தாண்டவம், ஆனந்தத் தாண்டவம்,

அனவரதத் தாண்டவம், பிரளயத் தாண்டவம், சங்காரத் தாண்டவம் என ஐவகைத் தாண்டவங்களும் நிகழுகின்றன. ஆன்மாக்களை முனனேற்ற ஆண்டவன் நடிக்கின்ற இவ் வைவகைத் தாண்டவங்களையும் ஞானக் கண்ணால் தரிசித்து,

"ஆமே பொன்னம்பலம் அற்புதம் ஆனந்தம்
ஆமே திருக்கூத்து அனவரத தாணடவம்
ஆமே பிரளய மாகும் அத்தாணடவம்
ஆமே சங்கராத் திருத்தாண் டவங்களே"

என அருளி இந்த ஊன்பற்றி நின்ற உயிருக்கு உணர்வுறுத்து கின்றார்.

தெளிந்த அச்சிவயோக நிலையிலே நின்று அசபையால் உணர்வு திருவடியில் பொருந்த இறைத்தன்மை முழுதும் உணருகின்றார் திருமூலர். சிவமாம் பரம்பொருள் தனக்கு ஒப்பில்லாத பேரொளியாயும், தத்துவம் முழுதும் கலந்து செறிந்து நிற்கும் மெய்ப்பொருளாயும், அகர உகரமாகிய சிவசக்தியாகியும், அநுக்கிரகத்தின் பொருட்டு ஆற்றுகின்ற ஐம்பெருங்கூத்திற்கும் தனி முதலாயும் விளங்கி, அனைத் திற்கும் தான் ஆதாரமாய்த் தனக்கொரு ஆதாரமின்றி, தானே தனக்கு ஆதாரமாய் நிற்கும் நிலையினை உணர்ந்து அநுபவித்து,

"தானே பரஞ்சுடர்; தத்துவமாய் நிற்கும்
தானே அகார உகாரம தாய்நிற்கும்
தானே பரஞ்சுடர் தத்துவக் கூத்துக்குத்
தானே தனக்குத் தராதலம் தானே"

என்று நமக்கருளிச் செய்கின்றார்.

பரம்பொருளோடு தான் அசபா நிலையில் ஒன்றிய சிவ யோக நிலையில் அடையும் பேறுகளாக,

"சொல்லும் ஒருகூட்டில் புக்குச் சுகிக்கலாம்
நல்ல மடவார் நயந்து டனேவரும்
சொல்லினும் பாசச் சுடர்பாம்பு நீங்கிடும்
சொல்லும் திருக்கூத்தின் சூக்குமந் தானே"

என்று கூறுகின்றார். பிறிதோருடம்பில் புகுந்துச் சிவானந்தம் அநுபவிக்கலாம்; துன்புறும் உயிர்க்கெலாம் இன்பமருளிச் சுகிக்கலாம்; அதனால் அருட்சக்தி விரும்பிச் சொற்பொருளாய் உடன் நிற்கும்; பாசப்பாம்பு நீங்கும்; திருக்கூத்தின் உண்மைப் பொருள் புலனாகும் என்று, தான் மூலன் உடலில் புக ஏதுவாய் நின்றது தன் அசபா நிலை என்றும், உலகை இன்புறுத்தலே தன் கடனென்றும், அருட்சக்தி அதற்குத் துணையென்றும் கூறுகின்ற அற்புதம் சிந்தித்துணரத் தக்கது. மேலும் 'செம்பு பொன்னாகும் சிவாய நம என்னில்' என்று கூறுகின்றார். இரச வாதத்தினால் செம்பு பொன்னாவது போல் திருவைந்தெழுத்தைக் கணிப்பதால் சீவன் சிவனாகுமென்பது அதன் கருத்து.

கண்ணப்ப நாயனார் காளத்தியார் திருத்தொண்டிலே உறைத்து சீவன் சிவனும் பெருநிலையை எய்தப்பெற்றார் என்பதை,

"முன்புதிருக் காளத்தி முதல்வனார் அருள்நோக்கால்
இன்புறுவே தகத்திரும்பு பொன்னானாற்போல் யாக்கைத்
தன்பரிசும் வினையிரண்டும் சாருமல மூன்றுமற
அன்புபிழம் பாய்த்திரிவார் அவர்கருத்தின் அளவினரோ"

என்று கருத்தினால் அளவிட முடியாத அப்பெரு நிலைமையை எடுத்துக்காட்டுகின்றார் சேக்கிழார் பெருமான்

விசாரதருமர் (சண்டேசுரர்) கிடைத்த பொருளைக் கொண்டும், கிடைக்காத பொருளை அன்பினால் ஆக்கிக் கொண்டும், சிவலிங்க வழிபாட்டிலே ஈடுபட்டார். ஆவின்

பாலைச் சொரிந்து ஆட்டினர். அது கண்ட தந்தையார் வெகுண்டார்; கைக்கோலால் முதுகில் பலகாலுமடித்து வசைமொழிந்தார். உணர்வால் சிவத்தோடு ஒன்றியிருந்த விசார சருமர் தந்தையார் செய்கைகளை உணரவில்லை. தந்தை பாலைக் காலால் எற்றவே உணர்வு தலைப்பட்டது. விழித்தார்; அருகே இருந்த கோலை எடுத்தார். அதுவே மழுவாயிற்று; தந்தையார் கால்களை அரிந்தார். கம்பு எவ்வாறு மழுவாயிற்று? விசாரசருமர் உணர்வால் சிவத்துடன் ஒன்றி, சிவமாம் தன்மை எய்தியிருந்தார். திருவைந்தெழுத்திலே உள்ளமும் உணர்வும் ஒடுங்க யாக்கைப் பரிசும் சிவத்தன்மை எய்த நின்றார். சிவபெருமான் கையில் அமர்வது கம்பா? மழுவா? சிவமாம் தன்மை எய்தியிருந்தால் கம்பு மழுவாய் வந்தமர்ந்தது. தனக்குப் பலதொல்லைகளைத் தந்தை விளைத்தும்உணராத சேய்ஞலூர்ப் பிள்ளைக்கு, அவர் பாலை யெற்றியதும் எவ்வாறு உணர்வு வந்தது? சண்டேசுரர் சிவனோடு உணர்வால் ஒன்றுபட்டும், சிவத்தொண்டு என்ற அளவிலே உலகோடு பொருந்தியும் நின்றாராதலினாலே சிவத்தொண்டிற்கு இடையூறு ஏற்பட்டபோது அவ்விடத்து உணர்வு முந்தியது. இத்தகைய பெருநிலையே அசபாநிலை. ஜீவன் முத்த நிலையுமாம்.

இவ்வற்புத அசபா நிலையின் பெருமையினை எது கொண்டு அளவிட்டுக் கூறுவது? அந்நிலையை அடைவிக்கும் அசபா மந்திரத்தின் பெருமையினை என்னவென்று கூறுவது? பேசா மந்திரத்தைப் பேசவொண்ணுமோ? பேசாத அருளுணர்விலே ஒன்றி உணர்வோமாக.

திருச்சிற்றம்பலம்

—:(o):—

# நடராச தத்துவம்

(க. வச்சிரவேலு முதலியார்)

தத்துவம் என்பதற்கு அதன் தன்மை (தத்+த்வம்) என்பது பொருள். நடராச தத்துவம்—நடராச மூர்த்தியின் உண்மையியல்பு. அதை

ஆதியாய் நடுவும் ஆகி அளவிலா அளவும் ஆகிச்
சோதியாய் உணர்வும் ஆகித் தோன்றிய பொருளும் ஆகிப்
பேதியா ஏகமாகிப் பெண்ணுமாய் ஆணும் ஆகிப்
போதியா நிற்கும் தில்லைப் பொதுநடம் போற்றி போற்றி !

என்னும் பாட்டால் சிந்தித்து அறியலாம்.

இது சேக்கிழார் அடிகள் திருவாக்கு; தில்லை மன்றுள் முதல்வனால் இயற்றப்படும் திருக்கூத்து, அவனுடைய இயல்புகளை உணர்த்துகின்றது; போதியா நிற்கும நடம் அது. அவன் எல்லாப் பொருள்களுக்கும் முதலாய் நின்று தோற்றுவிக்கிறான்; நடத்துவோனாயிருந்து காக்கின்றான்; அளவு படாத வழி முதல்வனாயிருந்து ஒடுக்குகிறான்; உயிர்களின் உணர்வின் சோதியாய் மறைந்து நின்று அவற்றின் அறிவை வளர்த்து வருகின்றான். பக்குவ காலத்திலே மெய்யுணர்வாகவும் அதனை உணர்த்துதற்குத் தோன்றும் குருமூர்த்தியாகவும் உளன்; உயிர்களோடு வேறுபடாது ஒன்றிநிற்கும் சத்தியாகவும் உளன்; அதனால் அம்மையப்பராயும் உளன். இப்படி யெல்லாம் விளங்கி ஆன்மாக்கள் முடிவில் எய்துதற்கு உரிய பிராணந்த நிலையினையும், அதனை அணைந்து இன்புறும் வழியினையும் திருநடனம் போதிக்கின்றது. வணங்கினால் அவ்வின்பத்தைப் பெறலாம்— என்பது பாட்டின் பொருள்.

முதலில் முதல்வன் கொள்ளும் திருவுருவம் பற்றிச் சிறிது எண்ணுவோம்: உருவமில்லாத முதல்வன் நாம் மெய்யுணர்ந்து நிலைத்த இன்பம் பெறுதற் பொருட்டுத் திருவுருவம் கொள்கின்றான். அவ்வுருவம் நமக்கு உள்ள உடம்பு போல மாயையி லிருந்து உண்டானதன்று; வினைக்

டாக வந்ததும் அன்று; வினைப்பயனை நுகர வந்ததும் அன்று; நால்வகைத் தோற்றம் எழுவகைப் பிறப்பில் அடக்கி வைத்துப் பேசப்படுவதும் அன்று; பிறர் ஒருவரால் அவனுக்குக் கொடுக்கப்பட்டதும் அன்று. பின்னர் அது யாது என்றால், அவன், தன் கருணையினால், தன்னை நாம் உணர்ந்து போக மோக்ஷங்களைப் பெறுதற்பொருட்டு, ஞானமாகிய தன் திருவருளே தனது பிழம்பாகத் தோன்றி வெளிப்படுவது. இப்படித் திருமேனி கொள்ளு முறை சிவபெருமான் ஒருவனுக்குத்தான் சிறப்பாக நூல்களுட் பேசப்பட்டு வருகின்றது இக்கருத்து பற்றியே சிவபிரானைச் சைவர்களும் பிறரும் "பிறப்பில் பெருமான்" என்றும், "பிறவா யாக்கைப் பெரியோன்" என்றும் "முழுமுதற்கடவுள்" என்றும், "ஒருவன்" என்றும் சிறப்பித்துக் கூறுவது தொன்றுதொட்டு வரும் மரபாக உள்ளது.

மேற்கூடிய முறையில் சிவபிரான் அன்பர்களுக்குக் காட்டியருளிய திருவுருவங்கள் பல. அவற்றுள் நடராச மூர்த்தம் அவன்றன் முழு முதற்றன்மையைத் துலக்குவதாய் சித்தாந்த சைவத்துட் கூறப்படும் முடிநிலை முடிபாகிய பரானந்த அனுபூதி நிலையினைப் போதிப்பதாய் உள்ளது. அதுபற்றிச் சில உண்மைகளை இங்குச் சிந்திப்போம்.

நடராசர் என்றவுடனே, திருவருள் வெளியாகிய அம்பலமும், அந்தவெளியில் முதல்வன் நின்று ஒரு பாதத்தைத் தூக்கி, பக்கத்தில் அருள்வடிவாகிய அம்மை நின்று காணும்படி திருக்கூத்து இயற்றுவதும் நம் நினைவுக்கு வரும். இத்திருக்கூத்தைச் சேக்கிழார் "போதியா நிற்கும் பொது நடம்" என விவரிக்கிறார். பொதுநடம் என்றமையால் (ஞான) சபையில் இயற்றும் நடனம் என்பதோடு, எல்லா உயிர்களுக்கும் பொதுப்பட எல்லா உயிர்களுக்கும் எல்லா நன்மையும் விளையும்படி நடிக்கும் நடனம் என்பதும் விளங்கும். "போதியா நிற்கும் பொது நடம் என்று கூறுகின்றமையால் அந்நடனம் அவரவர் தகுதிக்கும் உணர்வு

நிலைக்கும் தக்கபடி உண்மைகளை உணர்த்தும் எனவும் கொள்ளலாம்.

குறைந்த முயற்சியில் நிறைந்த பயனைப்பெறக் கருது வது நம் இயற்கை. அதற்கு ஏற்றபடி அம்பலக் கூத்தர் அருமையில் எளிய அழகராய் நின்று நம்மை வசப்படுத்து கின்றார். மற்றைய திருவுருவங்களைப் பல்காலும் பயின்று அருச்சித்து வந்தால்தான் பயன்பெறலாம். ஆனால் ஆனந்த நடராசமூர்த்தியை ஒருகால் கண்டு கும்பிட்டால் போதும்; பரகதியை அப்பொழுதே வழங்குவார். இதை அவர் அபிநயமே காட்டுகிறது. அவர் வலப்பாதத்தை முயலகன் மேல் ஊன்றி நின்று இடப்பாதத்தைத் தூக்கி நிறுத்தி, அதை இடக்கரத்தால் காட்டி வலக்கரத்தால் போதும் என்று அமைக்கிறார். இதனால் கூடும் கதி, ஒருகால் கும்பிட் டால் போதும் என்னும் குறிப்பு வெளிப்படுகிறது.

"ஒருகால் கும்பிட்டால் போதும்" என்பதற்கு நாம் இரண்டு பொருள்செய்து கொள்ளலாம். தூக்கிய பாதம் ஒன்றையே கும்பிட்டால் போதும் எனவும், அதையும் "ஒரு தடவை" (ஒருகால்) கும்பிட்டால் போதும் எனவும் கொண் டின்புறலாம். இதுபோன்ற உணர் வின்பங்களைக் கவிஞர் களுக்கும் கலைஞர்களுக்கும் பொதுநடம போதிக்கின்றது.

திருநாவுக்கரசர் முற்றத் துறந்த ஞானத் தவமுனிவர். அவர் சென்ற இடங்களில் எல்லாம் "பிறவாமை" வேண்டும் என்றே சொல்லிக்கொண்டு வந்தார். அப்படி வரும்போது தில்லைத் திருக்கோயிலுட் சென்று திருவம்பலத்தைக் கண்டார். கண்டவுடன், உள்ளும் புறம்பும் அவர் உணர்வு கரைந்து அன்பாய் நெகிழ்ந்து உருகிற்று. எதிரே இருந்த திருவம்பலத்தையும் ஆனந்தக் கூத்தையும் மட்டும் காண வில்லை. அவர் அகத்தே இருந்த பரம ஆகாசமாகிய திருவருள் வெளியில் அவர் ஆன்மா கலந்தது. அங்குப் பேரின்ப சொரூபம் விளங்க அதனைப் பத்தியா யுணர்ந்து அருளை வாய்மடுத்து அமுதயாய்ப் பருகித்திளைத்து நின்றார்.

" நீடுந்திருவுடன் நிகழும் பெருகொளி நிறையம்பல
நினைவுறநேரே
கூடும்படி வரும் அன்பால் இன்புறு குணமுன் பெறவரும்
நிலைகூட,
தேடும் பிரமனு மாலுந் தேவரும் முதலாம் யோனிகள்
தெளிவொன்று
ஆடுங் கழல்புரி அமுதத் திருநடம் ஆரா வகை
தொழுதார் கின்றார் "

இப்படி அவர் அனுபவத்தைச் சேக்கிழார் தெரிவிக்கின்றார். (உயிர்களின் தெளிவில், அறிவில் ஒன்றி ஆடுவது முதல்வன் கழல்). அப்பொழுதே அப்பர் பெருமான் தம் கருத்தை மாற்றிக்கொண்டார். ஆனந்த நடனத்தைப் பல்காலும் கண்டு கும்பிடுதற்காக மேலும் மக்கட் பிறவி வேண்டும் என்று பாடத் தொடங்கிவிட்டார். பெரும்பற்றை உண்டுபண்ணும் பெரும் பற்றப்புலியூர் அல்லவா அது!

"அன்னம் பாலிக்கும் தில்லைச் சிற்றம்பலம்
பொன்னம் பாலிக்கும்; மேலும்இப் பூமிசை
என்னம்பா லிக்கு மாறுகண் டின்புற
இன்னம் பாலிக்கு மோஇப் பிறவியே"

அன்னம் என்றது முத்தியை; பாதகமே சோறு பற்றினவா தோணுக்கம் என்றமைகாண்க. முத்தி யின்பத்தைத் தரும் தில்லைச் சிற்றம்பலம், செம்பு பொன்னாவது போல, ஆன்மாவைச் சிவமாக ஆக்கிவிடுகிறது, அன்பு தழைத்து இன்பமாக மலர்கின்றது. இவையெல்லாம் பெறுவதானால், மீளப் பிறக்கலாம் அல்லவா? நடராச மூர்த்தியின் திருவுரு அவர் உள்ளத்தில் பதிந்துவிட்டது. உள்ளக் கிழியில் உரு வெழுதிக் கொண்டார் :

" குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயிற்
குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியிற்
பால்வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமும்
காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேஇந்த மாநிலத்தே"
என்று பாடுகிறார்.

நம்மை நோக்கிச் சொல்கிறார். முன்னே பார்த்த தில்லை என்றால், திருக்கூத்தை ஒருமையுடன் நினையுங்கள்: நமது குறைகள் நீங்கும்; முன்னே பார்த்தது இல்லை என்றால் தில்லைக்குச் சென்று காண்மின்கள். நீங்கள் அங்கே போனால் "எப்பொழுது வந்தாய்" என்னும் திருக்குறிப் போடு நகை முகத்தால் வரவேற்பார் முதல்வர். உம்மை மரணம் நீக்கி ஆள்வார் என்கிறார்:

"ஒன்றி யிருந்து நினைமின்கள் உந்தமக்(கு) ஊனமில்லை,
கன்றிய காலனைக் காலாற் கடிந்தான் அடியவற்கா,
சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம் பலத்துநட்டம்
என்றுவந் தாயென்னும் எம்பெரு மான்றன் திருக்குறிப்பே!

இது மாகவியோகியாகிய அப்பர், நம் சமயத் தந்தை, நடராச மூர்த்தியைக் கண்டு அனுபவித்த அனுபவம். இனிச் சாத்திரஞ் சொன்ன ஞானிகள் என்ன சொல்கிறார்கள் என்று பார்ப்போம்:

சைவசித்தாந்த சாத்திரம் பதினான்கனுள் ஒன்று உண்மை விளக்கம். அது கூத்தப்பிரான் திருவுருவின் இயல்பை நன்கினிது விளக்குகின்றது. நமக்கு மூன்று உடம்பு உண்டு; அவை தூல உடம்பு; அதற்குள் சூக்கும உடம்பு, அதற்குள் பரசரீரம். அதுபோலத் தில்லைக்கூத்த னுக்கும் மூன்று உடம்பு உள்ளன என்கிறது சாத்திரம், ஓங்காரமும் அதனைவிட்டு நீங்காத திருவைந்தெழுத்தும் கூத்தப் பிரானுக்குத் தூல உடம்பு, உயிரே அவனுக்குச் சூக்கும உடம்பு, உயிர்க் குயிரா யுள்ள திருவருளே அவன்றன் பரசரீரம்:

எட்டும் இரண்டும் உருவான லிங்கத்தே
நட்டம் புதல்வா நவிலக்கேள்—சிட்டன்
சிவாயநம என்னும் திருவெழுத்தஞ் சாலே
அவாயமற நின்றாடு வான்.

எட்டும் இரண்டும் பத்து; பத்தைத் தமிழில் ய என எழுது வோம். ய என்பது ஆன்மாவை உணர்த்தும். ஆன்மா

வாகிய லிங்கத்தில் ஐந்தெழுத்துருவாய் நின்று கூத்தியற்று கிறான் முதல்வன்.

ஓங்கார மேநல் திருவாசி; உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம்—

திருவாசியில் 33 அல்லது 51 சுடர்கள் இருக்கும், அச்சுடர்(ச்சிகை)கள் ஓங்காரத்தில் இருந்து தோன்றும் மாத்ருகாக்கரங்கள் எனப்படும் முதல் எழுத்துக்களைக் குறிக்கும்.

தூல சூக்கும பஞ்சாக்கரங்களே அவன் திருவுருவாகச் சமைந்துள்ளன :

ஆடும் படிகேள் நல்ல லம்பலத்தான் ஐயனே
நாடுந் திருவடியி லேநகரம்—கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகருமுகம் வாமுடியப் பார்

உதரம்—வயிறு.

சேர்க்கும் துடிசிகரம் சிற்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம்—பார்க்கில் இறைக்(கு)
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்

சேக்கிழார் அடிகள் குறித்த படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிலை மனவாசகங்கடந்தார் முதல்வன் திருவுருவில் வைத்துக் காட்டுகிறார். உண்மை விளக்கத்தை அருளிச் செய்தவர் மனவாசகங்கடந்தார்.

தோற்றம் துடியதனில், தோயுந்திதி அமைப்பில்,
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம்—ஊற்றமாய்
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோ தம் முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு

இது அண்டத்தில் வைத்துக் காணும் நடனம் (Cosmic dance)

இனி, அவன் உயிர்தோறும் கலந்து நின்று, மும்மலம் அகற்றி, சகல கேவலங்களிலிருந்து உயிரை அருணிலையில் உயர்த்துதலையும், பின் பேரின்ப வெள்ளத்தில் அழுத்துதலையும் (Spiritual emancipation) பின்வருமாறு உணர வேண்டும் என்கிறார் :

மாயைதனை உதறி, வல்வினையைச் சுட்டு மலம்
சாய அமுக்கி அருள் தான் எடுத்து—நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானழுத்தல்
தானெந்தையார்பரதம் தான்

இன்னும் அவர் பராசக்தியே திருவம்பலம் என்றும், இறைவன் தனது அருளையே மூர்த்தியாகக் கொண்டு நடம் இயற்றுகின்றான் என்றும் கூறுகின்றார்.

“கூடுங்கதி ஒருகால் கும்பிட்டால் போதும்” எனக் கவிஞர்கள் கண்ட அபிநயத்தையே, இவர் மும்மலத்தையும் முதல்வன் அருளால் சேதித்த முதர்கள் தற்பாவம் நீங்கும் இடத்தே வெளிப்படும் பரானந்த வெள்ளத்தை மொண்டு அருந்தி, அவ்வெள்ளத்துள் அழுந்தி மூழ்கி இருக்குமாறு போதிப்பதாக உணர்கிறார்கள் என்று கூறுகிறார். இங்ஙனம் போதித்தல் பற்றித் தில்லைத் திருநடனம் பரானந்த போத நடனம் என உயர்த்துக் கூறப்படும்.

இறுதியாகத் தவமுதல்வர் சம்பந்தர் திரு நடத்தை எப்படி அனுபவித்தார் எனக் காண்போம்.

திருஞானசம்பந்தர், திருவம்பலத்தின் முன் சிரத்தின் மேல் கைகூப்பி நின்றவர் திருவம்பலத்தைத்தாம் முதல்வன் அருளாற்பெற்ற உணர்வரிய மெய்ஞ்ஞானமாகவே கண்டார்; தம்முள் நிறைந்த ஞானத்தின் விளைவாகத் தாம் அனுபவித்த பரமானந்தமாகவே திருக்கூத்து இருக்கக் கண்டார்; திருவுந்தியாரிற் கூறியுள்ளபடி முதல்வனையும் அம்மையையும “பேரின்பமான பிரமக்கிழத்தியோடு—ஓரின்பத்துள்ளான்” என உணர்ந்து கும்பிட்டார்.

அண்ணலார்தமக் களித்தமெய்ஞ் ஞானமே ஆனஅம்
பலமும்தம்
உண்ணிறைந்த ஞானத்தெழும் ஆனந்த ஒருபெருந்
தனிக்கூத்தும்
கண்ணின் முன்புறக் கண்டுகும் பிட்டெழுங் களிப்பொடுங்
கடற்காழிப்
புண்ணியக்கொழுந் தனையவர் போற்றுவார் புனிதரா
டியபொற்பு

பின் இறைவனைப் போற்றுகின்றார் :

உணர்வின் நேர்பெற வருஞ்சிவ போகத்தை ஒழிவின்றி
உருவின்கண்
அணையும் ஐம்பொறி அளவினும் எளிவர அருளினை
எனப்போற்றி
இணையில் வண்பெருங் கருணையே எத்திமுன்
எடுத்தசொற் பதிகத்தில்
புணரும் இன்னிசை பாடினர் ஆடினர் பொழிந்தனர்
விழிமாரி

பேரின்ப சத்தியோடுகூடிய பேரின்ப வடிவமுதல்வனைக் கருவிகரணங்கள் கழன்று, யான் எனது என நிகழும் தற்போதமும் கழன்று, முதல்வன் திருவருளோடு கலந்து, தூய்தாய் விரிந்து நிற்கும் ஆன்ம உணர்வில் நேரே சார்ந்த போதுதான் சிவபோகம் என்னும் பேரின்பம் அனுபவிக்கப் படும். அங்குத் தம் உணர்வுக்கும் முதல்வனுக்கும் ஊடே எப்பொருளும் நிற்பதில்லை. அப்படி இருந்து நுகர வேண்டிய இன்பத்தைக் கூத்தப்பிரான் தாம உடம்போடு கூடிக் கண்களால் நோக்கும் போதே அந்நோக்கின்வழி உள் நுழைந்து ஐம்பொறிகளாலேயே பெறப்படுவதாக எளிதிற் கிடைக்கும்படி அருளினன் எனப் போற்றினர்.

திருக் கூத்தைக் கண்டால் பரம சுகம் விளையும் என்று திருமூலர் கூறுகிறார் :

புளிக்கண் டவர்க்குப் புனல்ஊறு மாபோல்
களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
துளிக்குங்கண் ணீருடன் சோரும் நெஞ்சத்(து) இருள்
ஒளிக்கும்ஆ னந்த அமுதூறும் உள்ளத்தே.

மாணிக்கவாசகர், நினைத்தாலும், பேசினாலும் கூடத் திருக் கூத்துப் பரானந்தத்தைச் சொரியும் என்கிறார்: அதனால் எடுத்த பாதத்தை நினைந்து வாழ்த்தும்படி உபதேசிக் கின்றார்:

"நினைத்தனை உள்ளதோர் பூவினிற்றேன் உண்ணாதே
நினைத்தொறும், காண்டொறும், பேசுந்தொறும்
எப்போதும்.
அனைத்தெலும்புள்நெக ஆனந்தத் தேன்சொரியும்
குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ"

என்கிறார்.

நாம் தில்லைக்கூத்தனை முன்னர் துடி, பின் அங்கி, பின் னன்றிய பாதம் இவற்றை எண்ணி முறையே மாயையை உதறி, வினையைச் சுட்டு, மல சத்தியை மெலிவித்து, பின் னர்த் தூக்கிய பாதம், வீசிய இடக்கரம், அமைத்த கரதலம் என்பவற்றைச் சேர்த்து எண்ணி அருணிலைத் தானம் சென்று ஆனந்தம் மொண்டருந்துவோமாக!

மன்னுக தில்லை! வளர்க நம்பத்தர்கள்!!

---

# பூரணலிங்கம் பிள்ளை

(ஆசிரியர்)

1966 ஆம் ஆண்டு முன்னீர்ப்பள்ளம் சி. பூரணலிங்கம் பிள்ளை பிறந்த நூறுவது ஆண்டு. 24—5—1866 இல் அவர் பிறந்தார். தமிழ் இலக்கியம், நாகரிகம், சமயம் ஆகிய துறைகளில் அறிவு பெருகாதிருந்த காலத்தில் தோன்றி, தமிழ் மக்களின் சிறப்பையும் சைவத்தின் சிறப் பையும் புலப்படுத்த ஆங்கிலத்திலும் தமிழிலும் பல நூல்கள் எழுதிய இப்பெரியாரை இன்று நாம் நினைவு கூரக் கடமைப்பட் டிருக்கிறோம். சென்னையில் படித்து பி. ஏ. பட்டம் பெற்று, எம். ஏ. வரையிலும் கூடப்படித் தார், பாளையங்கோட்டை, ஈரோடு உயர்நிலைப் பள்ளி களில் தலைமை ஆசிரியராயிருந்து, எட்டயபுர ராஜகுமார

னின் ஆசிரியராய் இருந்தார். டாக்டர் மில்லரின் கீழ் அவர் கல்லூரியிலும் ஆசிரியராயிருந்தார். சட்டப்படிப்பும் படித்தார். ஆங்கில இலக்கியம் பற்றிய விமரிசனங்களும், சட்ட நூல் ஆராய்ச்சிகளும் பல எழுதினர். திருநெல்வேலி, சென்னை, மதுரை, திருச்சி ஆகிய இடங்களில் பல கல்லூரிகளில் ஆசிரியராய்ப் பணியாற்றினர்.

இந்தக் காலங்களில் தமிழுக்கு அவர் பல வகையிலும் தொண்டு புரிந்தார். தமிழிலக்கிய சரித்திரம் இல்லாத குறையைப் போக்கி, அவர் ஆங்கிலத்தில் இரு நூல்கள் எழுதினர்: ஒன்று ஆரம்ப நூல்; அளவில் சிறியது; மற்றது தமிழ் இலக்கிய வரலாறு என்ற விரிவான நூல். இன்றும் கூட, அவர் எழுதிய அளவு, விரிவான நூல் தமிழில் ஏற்படவில்லை. எண்ணற்ற செய்திகளைப் பார்த்தறிந்து, கருத்துக்களை ஆராய்ந்தறிந்து அவர் அந்நூலை எழுதினர். இலக்கிய வரலாறு விளக்கம் எதுவும் கிடைக்காத அக்காலத்தில் அவர் எழுதிய நூல் ஓர் அரிய சாதனையாகும். தமிழ் இந்தியா என்பது அவர் எழுதிய மற்றொரு சிறப்பான ஆங்கில நூல். தமிழகம், அதன் எல்லை, இலக்கியம், சமயம், சமூகம், வாணிபம், போர்முறை, அரசியல், கலை, அறிவியல், மருத்துவம், கல்வி, தத்துவசாஸ்திரம் ஆகியவற்றை அவரே முதன்முதலில் ஆங்கிலத்தில் தொகுத்து எழுதியவர். டால்ஸ்டாய் கதைகள் சில தமிழில் எழுதியுள்ளார்.

நால்வர், பட்டினத்தார் போன்ற சைவப் பெரியார் வரலாற்றை ஆங்கிலத்தில் சைவ அடியார் பதின்மர் என்ற ஒரு நூலாக எழுதினர். அருள் வசப்பட்டு நிற்றலே இவர்கள் வாழ்வின் தத்துவம் என்பதை நன்கு விளக்கியுள்ளார்.

தமிழகத்தின் பெருமையையும் தமிழரின் சமயமாகிய சைவத்தின் பெருமையையும் உலகறியச் செய்யவேண்டும் என்று அரும்பாடுபட்டவர்களில் பூரணலிங்கம் பிள்ளையும் ஒருவர். நூற்றாண்டு விழாக்கள் பெருகுகின்ற இன்றைய நிலையில் இப்பெரியாரின் நூறாவது ஆண்டு பிறந்த நாள் வரும் இந்நாளில் இவரை நாம் நினைவுகூர்வது நமக்கு மேலும் எழுச்சி தரும் என்பதில் ஐயமில்லை.

பூரணலிங்கனர் திருநாமம் வாழ்வதாக.

# திருமண வாழ்த்து

அன்பு மிக்க அருமைக் குணத்தினன்
இன்பச் சொற்களே எவர்களும் இயம்புவோன்
பழகுதற் கினிய பண்புகள் படைத்தோன்
நண்பர்தம் நலங்கள் நாடிடும் நல்லோன்
செந்தமிழ் மொழியிலும் சிவநெறி அதனிலும்
புலமையும் பற்றும் பொருந்திடப் பெற்ருேன்
தமிழா சிரியர் கழகம் தன்னெடும்
சைவசித் தாந்த சமாஜம் தன்னெடும்
தொடர்பு கொண்டு தொண்டுகள் புரிவோன்
செம்மை மிக்க சித்தாந்தம் இதழின்
துணை ஆ சிரியராய்ப் பணிகள் செய்பவன்
துன்னு பெருஞ்சீர்ச் சென்னைமா நகரிற்
பச்சை யப்பன் உயர்நிலைப் பள்ளியின்
தலைமை சான்ற தமிழா சிரியனுய்ப்
பிறங்கி வரூஉம் சிறந்தநற் செம்மல்
அம்பைசங் கரன்தான் அரிதிவண் பயந்த
ஆசிலாச் செல்வன் வாசு தேவன்
புகழ்மிக வாய்ந்த பொதிகைச் சாரலில்
பாப நாசப் பால்குயர் தலத்தில்
கல்யாண சுந்தரக் கடவுள் திருமுனர்
சுப்பு முதலியார் தூய புதல்வியாம்
மரகதம் என்னும் மாண்புறு நங்கையை,
சுற்றமும் உறவும் சூழ்ந்து மகிழவும்
சான்ருேர் பலர்தாம் தகவுற வாழ்த்தவும்
இன்பத் திருமணம் இனிது புணர்ந்தனன்
எல்லா நலங்களும் எய்திச் சிறப்புறப்
பல்லாண்டு பல்லாண்டு வாழியர் நெடிதே !

---

சித்தாந்தம் இதழின் துணைஆசிரியர்-அம்பை-R. சங்கரன் அவர்களின் புதல்வன் செல்வன் ச. வாசுதேவனுக்கும் அம்பா சமுத்திரம்-வே. சுப்பு முதலியார் புதல்வி செல்வி மரகதம் அம்மாளுக்கும் 8—6—66' இல் அம்பையில் நடைபெற்ற திருமணத்தின்போது சமாஜத் துணைச்செயலர்-மு நாராயண சாமியால் வாழ்த்தப் பெற்றது.

# மதிப்புரை

''கோவை கிழார் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்பு'' என்னும் நூல் ஒன்று வரப்பெற்ருேம். இது தவத்திரு சாந்தலிங்க அடிகளார் கல்வி நிலையத்தாரால் (பேரூர்–கோவை-10) திருமடத்தின் சத்வித்யா சன்மார்க்க சங்கப் பொன் விழாவின்போது நடைபெற்ற பாராட்டுவிழாவில் வெளியிடப்பெற்றது. திரு. கோவை கிழார் அவர்களின் திருவுருவப்படத்துடன் அவர் வரலாற்றை இரத்தினச் சுருக்கமாக மிக அழகிய முறையில் அச்சிட்டுள்ளனர்.

வையத்து வாழ்ந்து வருகின்றவர் இப்பெரியார் என்பது இக்குறிப்பிலிருந்து தெற்றெனத் தெளிவாகின்றது. பிறரும் எவ்வாறு வாழ்க்கையைச் செலுத்தவேண்டும் என்பதற்கு இந்நூல் ஒரு முன் மாதிரியாய் அமையும் என்றும் கருதுகின்ருேம். விலை குறிக்கப் பெறவில்லை. வாழ்க கோவைகிழார்.

நயினை நாகேசுவரித் தல வரலாறு : குல. சபாநாதன், பூபாலசிங்கம் புத்தகசாலை, 21. பெரியகடை வீதி, யாழ்ப்பாணம். ரூ. 1

யாழ்ப்பாணத்து நயினுதீவில் கோயில் கொண்டுள்ள அம்பிகை கோயிலின் வரலாற்றை இச்சிறு நூல் கூறுகிறது. இது கட்டியது 1788 இல்; 1951 இல் திருப்பணி. 16 படங்கள் கொண்டது. சித்திரத் தேர்பற்றிய விளக்கம் சொல்லப்பட்டுள்ளது. நாகேசுவரி ஊசல், பதிகம், மான்மியம் முதலான பல பழைய, புதிய பாடல்கள் சேர்க்கப்பட்டுள்ளன. அழகான அச்சு. இலங்கையின் புராதன சைவ ஆலயங்கள் வரிசையில் இப்புத்தகமும் ஒன்று. யாழ்ப்பாணத்தாருக்கு மட்டுமன்றி, ஏனையோருக்கும் பயன் படத்தக்க நல்ல சிறு நூல்.

முல்லையும் பூத்தியோ. செ. வேங்கடராமச்செட்டியார், பாரி நிலையம், 59. பிராட்வே, சென்னை–1. ரூ. 3

இது ஆசிரியர் பல பத்திரிகைகளில் எழுதி வந்த பதினுன்கு கட்டுரைகளின் தொகுதி. இவை பெரும்பான்மையும் சங்க இலக்கியத் தொடர்பு உடையன. இவருடைய எழுத்தில் திருத்தமும், உண்மையும், பொருட் பரப்பும் காணலாம். இடைப்பிற வருதல் இராது. கல்லூரி மாணக்கர் இவற்றைப்பயில்வார்களாளுல் நல்லறிவு பெறுவதோடு, கட்டுரை எழுதும் முறையையும் நன்கு கற்பார்கள்.

—ஆசிரியர்.

## சிவயோகசுவாமிகள் பிள்ளைத் தமிழ்:

ஸ்ரீமதி இரத்தினம் நவரத்தினம், திருவடி, கொழும்புத்துறை, இலங்கை. இது பருவத்துக்கு மூன்று பாடல் வீதம் 30 பாடல் கொண்ட பிள்ளைத் தமிழ் நூல. அரசியல் கொடுமையால் ஒடுக்கப்பட்டு வாழ்கின்ற யாழ்ப்பாணத்தில் இளம் பிள்ளைகளிடத்தில் வாழ்க்கையில் பெருஞ் சோர்வு ஏற்பட்டிருக்கிறது. அரசியற் சட்டம் அங்குத் தமிழ் மக்களை ஒடுக்கவென்றே வகுக்கப்பட்டுள்ள காரணத்தால், இளைஞர்களுக்கு எதிர்காலவாழ்வில் நம்பிக்கை குன்றி, யாவும் நிராசையாகி, இதனால் சமய மாற்றமும் உலகாயதக் கொள்கையும் பெருகியுள்ளன. பௌத்த சமயத்தை யாழ்ப்பாணத்தில் பரப்பி, மக்கள் அனைவரையும் எதிர் காலத்தில் பௌத்த சமயத்தவராக்கிவிட்டால் அரசியற் பிரசினையே இராது என்ற நோக்குடன் நடைபெறும் அரசாங்கச் சூழ்ச்சியை யாழ்ப்பாண மக்கள் உணர்ந்து விழிப்புப் பெறவில்லை. இந்நிலையில், அங்கு மக்களிடையே சமய விழிப்புணர்ச்சியை யூட்ட, சிவயோக சுவாமிகள் வந்தார். முதிர்ந்த பிராயத்தில் சிவ தொண்டன் என்ற சங்கம் நிறுவி மக்களை நல்ல சைவ வாழ்வில் ஈடுபடுத்தினார்; தீவிர பிரசாரம் செய்வித்தார். அவருடைய திருக்கண் நோக்கால் உய்திபெற்றவர் மிகப்பலர். அவர்களுள் இரத்தினம் நவரத்தினம் அம்மையாரும் ஒருவர். இவர் சுவாமிகள் 1963 இல் சமாதியடைந்த சமயம் பாடிய நூலே இப்பிள்ளைத் தமிழாகும். நூல் மிகவும் அழகாகப் பெரிய அளவில் தடித்த காகிதத்தில் அச்சிடப் பட்டுள்ளது. முகப்பில் சுவாமிகளின் படம் உள்ளது. பக்கத்துக் குரிய விளக்கப் படத்துடனும் இறுதியில் குறிப்புரையுடனும் அச்சாகியுள்ளது. அழகான பதிப்பு.

---

பூவாளூர்ச் சைவ சித்தாந்த சங்கத்தின் 5வேது ஆண்டு விழா 21, 22-5-66இல் சித்தாந்த கலாநிதி வித்துவான் ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் தலைமையில் சிறப்புற நிகழ்ந்தது. புலவர் பலர் பங்குகொண்டு விழாவைச் சிறப்பித்தனர்.

நெமிலி அப்பர் சுவாமிகள் வாரவழிபாட்டுச் சபையின் புதுக்கட்டிடக் கும்பாபிஷேகம் 1—6—66 அன்று, திருவலம்—ஸ்ரீ சிவாநந்த மௌனசுவாமிகள் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. அதுபோழ்து திருமுறைக் காவலர்—திரு. அ. சோமசுந்தரம் செட்டியார், எம். ஏ. அவர்கள் கட்டிடத்தைத் திறந்து வைத்தார்கள். திரு. ச. சச்சிதானந்தம் பிள்ளை, பி. ஏ. எல். டி. அவர்கள், திரு. அ. சோமசுந்தரம் செட்டியார் அவர்கள் படத்தைத் திறந்துச் சொற்பொழிவாற்றினர்.

திரிசிரபுரச் சைவ சித்தாந்த சபையின் சார்பில் 25—5—66-ல் சேக்கிழார் திருநாளும், 4—6—66-ல் திருஞானசம்பந்தர் திருநாளும் கொண்டாடப் பெற்றன. வித்துவான்—திரு. பட்டுசாமி ஓதுவார் அவர்கள் இவ்விரு பெரியார்கள் பற்றிச் சொற்பொழிவாற்றினார்கள்.

8, 9—6—66 ஆகிய இரு நாட்களிலும். பாம்பன்-ஸ்ரீமத்; குமரகுருதாச சுவாமிகளின் 37-வது ஆண்டுக் குருபூசை, சென்னை திருவான்மியூருக்கு அடுத்த மயூர புரத்திலுள்ள சுவாமிகள் சமாதி நிலையத்தில் வெகுசிறப்பாகக் கொண்டாடப்பெற்றது.

சென்னை ஆச்சாரப்பன் தெருவிலுள்ள செல்வ விநாயகர் ஆலயத்தில் 8-5-'66 ஞாயிறு காலை 7-30 மணிக்கு வள்ளி தெய்வயானை சமேத முருகப்பெருமான் திருவுருவப்பிரதிட்டை செய்யப்பட்டது. ஆலய அறங்காவலரான திரு. ஈக்காடு உலகநாத முதலியார் அவர்கள் இது குறித்து மேற்கொண்ட முயற்சி மெச்சத்தக்கது.

திருப்போரூர் ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சுவாமிகள் மடாலயத்தில் 14 வது பட்டம் முடிசூட்டு விழா 11-5-66 புதன்கிழமை யன்று சிறப்புற நிகழ்ந்தது. ஸ்ரீலஸ்ரீ சிதம்பர சிவஞான சுவாமிகள் தனிப்பெருமை படைத்த திருப்போரூர்த் திருக்கோயில், திருமடங்களையும் தங்கள் அருளாட்சியில் எல்லா வகையானும் சிறக்க ஆள, முருகப்பெருமான் அருள்புரிவாருக.

புரசைத் திருநெறிக் கழகத்தின் சார்பில் 13-5-'66 மாலை திருநாவுக்கரசர் திருநாளும் 25-5-'66 மாலை சேக்கிழார் திருநாளும் கொண்டாடப்பெற்றன. ஷ கழக 63 ஆம் திங்கள் வழிபாடு காவிரியின் வடகரையில் உள்ள திருவாரூர், சிதம்பரம் முதலிய 40 திருத்தலங்களில் 15-5-'66 முதல் 22-5-'66 முடிய சிறப்புற நிகழ்ந்தது.

மறைமலையடிகள் தமிழ்நெறி மன்றம் என்னும் ஒரு தலைமை நிலையம் 15-5-66 அன்று சென்னையில் அடிகளார் மாளிகையிலேயே தொடங்கப்பெற்றது. அறிஞர்கள் பலர் மன்றம்

செய்யவேண்டுவனவாய ஆக்கவேலைகள் குறித்துப் பேசினர். இம்மன்றச் சார்பில் அடிகள் பற்றி அறிய வெளியீடு ஒன்றும் வந்துள்ளது.

செட்டிக்குளம் சிவநெறி வாரவழிபாட்டுக் கழகத்தார் இருவூரில் 14வது சமயச் சொற்பொழிவுக் கூட்டத்தைச் சிறப்புற 22-5-'66 ஞாயிறன்று நடத்தினர்.

குன்றத்தூர் சேக்கிழார் திருப்பணிக்கழக 25 ஆம் ஆண்டு வெள்ளி விழா 16-5-'66 முதல் 25-5-'66 முடிய சிறப்புற நிகழ்ந்தது. புலவர் பலரும் பெருமக்களும் பங்குகொண்டு சொற்பெருக்காற்றினர்.

மேலும் சேக்கிழார் திருக்கோயிலில் 16-5-66 முதல் 25-5-66 முடிய சிறந்த ஆண்டுப் பெருவிழாவும் நிகழ்ந்தது.

ஸ்ரீல ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் 278ஆம் ஆண்டு மகேசுவர பூசையை ஒட்டி மதுரையில் 5-6-'66, 6-6-'66 ஆகிய இரண்டுநாள்களிலும் தேவார அகண்ட பாராயணம் சிறப்புற நிகழ்ந்தது. மற்றும் காசிமுதல் குமரிவரை 47 இடங்களிலும் அன்னம் பாலிப்பு விழாக்கள் நிகழ்ந்தன.

சித்தாந்தம் துணையாசிரியர் வித்துவான் அம்பை இரா. சங்கரனார் அவர்களின் முதல் மகன் திருவளர்செல்வன் வாசுதேவனுக்கும் அம்பாசமுத்திரம் வே. சுப்பு முதலியார் அவர்களின் இளைய மகள் திருவளர்செல்வி மரகத அம்மாளுக்கும் திருமணம் நெல்லை மாவட்டம் பாவநாசத் திருத்தலத்தில் 3-6-66 அன்று சிறப்புற நிகழ்ந்தது. பெருமக்கள்பலரும் கலந்து மணமக்களை வாழ்த்தியருளினர். புதுமணத் தம்பதிகள் இறையருளால் எல்லா நற்பேறுகளையும் பெற்று நல்வாழ்வு வாழ அவனருளையே துணையாய்க்கொண்டு இறைஞ்சுகின்றோம்.

நம் சமாஜச் செயற்குழு உறுப்பினர் திரு. பூ. ஆலால சுந்தரஞ் செட்டியார் அவர்கள் திருமகளார் திருவளர்செல்வி ஞானப்பூங்கோதைக்கும் வாலாஜாபேட்டை M. K. வேலு செட்டியார் அவர்கள் திருமகனார் திருவளர்செல்வர் சரவண செட்டிக்கும் சென்னைப் பூங்காநகர் கந்தகோட்டத்தின் அண்மையிலுள்ள திருக்கல்யாணக் கூடத்தில் 5-6-'66 அன்று திருமணம் சிறப்புற நிகழ்ந்தது. புதுமணமக்கள் பகரரு நற்பேறுகள் பலவும் பெற்று நீலமேனிவாலிழைபாகன் அருளால் நீடுவாழ இறைஞ்சி ஏத்துகின்றோம்.

---

**Printed at the Sengunthamithran Press, 33, Armenian St., Madras-1 by V. Sambandan, Edited by M. Arunachalam, M. A., and Published by S. Satchidanandam Pillai, B. A., L. T., for the Saiva Siddhantha Maha Samajam, 12, East Mada St., Mylapore, Madras-4.**